ரூ. 3.50

திருவள்ளுவராண்டு 2037
பங்குனி - மார்ச் 2006

# மக்கள் சிந்தனை

சமய சமுதாய இலக்கிய
திங்களிதழ்

## அறிஞர் மா. இராசமாணிக்கனார்
## நூற்றாண்டு விழா – சிறப்பிதழ்




சிறப்பாசிரியர் : தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்

# மக்கள் சிந்தனை

சமய சமுதாய இலக்கிய திங்களிதழ்

## விளம்பரக் கட்டணம்

| விவரம் | அளவு | 1 வெளியீடு | 12 வெளியீடு |
|---|---|---|---|
| பின் அட்டை | | | |
| வெளிப்புறம் | 1 பக்கம் | ரூ. 750 | ரூ. 7500 |
| அட்டை உட்புறம் | 1 பக்கம் | ரூ. 650 | ரூ. 6500 |
| இதழ் உட்புறம் | 1 பக்கம் | ரூ. 500 | ரூ. 5000 |
| இதழ் உட்புறம் | 1/2 பக்கம் | ரூ. 350 | ரூ. 3500 |

## சந்தா விவரம்

| | |
|---|---|
| தனி இதழ் | ரூ. 3-50 |
| ஆண்டுச் சந்தா | ரூ. 40-00 |
| ஆயுட் சந்தா | ரூ. 400-00 |
| புரவலர் கட்டணம் | ரூ. 1000-00 |

சந்தா - விளம்பரம் அனுப்பவேண்டிய முகவரி :

*நிர்வாகி,*

**மக்கள் சிந்தனை**

குன்றக்குடி - 630 206

தொலைபேசி எண். 04577 - 264227

ஆசிரியர்

**மரு. பரமகுரு**

அச்சிட்டு வெளியிடுவோர் :

சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி.

# மக்கள் சிந்தனை

நிறுவனர் : தவத்திரு குன்றக்குடி அடிகளார்

| திருவள்ளுவராண்டு 2037 (பார்த்திப) | மாதம் : பங்குனி |
| --- | --- |
| மலர் : 19 | இதழ் : 3 |



# சுதேசிப் பொருளாதாரத்தைச் சுடரொளி வீசச் செய்வோம்!

இந்தியப் பொருளாதாரம் அடிமை இந்தியாவில் எவ்வாறான அவலநிலையில் சுரண்டப்பட்டிருக்கின்றது என்ற கசப்பான உண்மையை வரலாறு மறைத்துவிட்டதோ என எண்ணத் தோன்றுகிறது! "இந்தியப் பொருளாதாரம் இருளில் ஒளி" என்ற நூலில் நூலாசிரியர் பேராசிரியர் மு.நாகநாதன் இதைத் தெளிவாக விளக்குகின்றார். சுதேசிப் பொருளாதாரத்திற்கு எதிரான சுரண்டும் பொருளாதாரம் அடிமை இந்தியாவின் ஆரம்பகாலக் கட்டங்களிலேயே தன் நச்சுச் செயலைச் செய்யத் தொடங்கிவிடுகின்றது.

இந்தியா இரண்டு நாடாகவே இருந்துள்ளது. வறுமையில் வாடும் சுரண்டப்படும் ஏழை எளிய மக்கள் வாழும் இந்தியா. இந்த மக்களைச் சுரண்டுவதற்காகவே செயல்படுகின்ற நிர்வாக அமைப்புமுறை என இருந்துள்ளது. உலகத்திலேயே ஒரு நாட்டை ஆதிக்கம் செலுத்துவதற்கு அந்த நாட்டுமேல் தொடுக்கப்பட்ட ஒடுக்குமுறைக்கான இராணுவச் செலவை அந்நாட்டின் பொதுக்கடனாக மாற்றிய கொடிய கறுப்பு அவலம் இங்குதான் நிகழ்ந்திருக்கின்றது. 1857இல் நடைபெற்ற சிப்பாய்க் கழகத்தின்போது அதற்குரிய இராணுவச் செலவிற்காகக் கிழக்கிந்திய கம்பெனி 7 கோடி பவுண்டுகள் செலவிட்டது. இந்த 7 கோடி பவுண்டுகள் செலவை இந்தியாவை 1858-ல் தனது நேரடி நிர்வாகத்திற்கு உட்படுத்திய இங்கிலாந்து அரசு இந்தியப் பொதுக்கடனாக மாற்றியது. இந்தப்

பொதுக்கடன் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் செய்த இராணுவ அடக்குமுறைக்குச் செலவிட்ட தொகையாகும். தங்களை அடிமைப்படுத்தித் தாங்களே அதிக விலை கொடுத்துக் கடனாளியானவர்கள் இந்திய மக்களே! 1858இல் இந்தியாவின் ஒவ்வொரு குடிமகனின் தலையில் விழுந்த முதல் பொதுக் கடன் இதுவேயாகும். அந்நிய ஏகாதிபத்தியத்தின் சுரண்டல் இயல்பாக எளிமையாக நடைபெற்றது.

சுரண்டலின் விளைவாக மக்கள் சந்தித்த செயற்கைப் பஞ்சங்களின் எண்ணிக்கை கணக்கில் அடங்காதவை.

"கஞ்சி குடிப்பதற் கிலார் – இதன்
காரணங்கள் இவை என்னும் அறிவுமிலார்
பஞ்சமோ பஞ்சம் என்றே – மிகப்
பரிதவித்தே உயிர் துடிதுடித்தே
துஞ்சி மடிகின்றாரே – இவர்
துயர்களைத் தீர்க்க ஓர் வழியில்லையே!"

என்று பாரதி பாடிய அவலநிலையில்தான் நம்மக்கள் செயற்கைப் பஞ்சங்களைச் சந்தித்து உழன்று கொண்டிருந்தார்கள்.

"காடு விளைஞ்சென்ன மச்சான் – நம்ம
கையும் காலும் தானே மிச்சம்"

என்ற பட்டுக்கோட்டையின் பாடல்வரிகள் உழைக்கும் பாட்டாளி வர்க்கத்தின் அடித்தளத்து ஏழை, எளிய மக்களின் குரலாக இருந்தது. 1765 முதல் 1908வரை 32 மிகக் கொடிய பஞ்சங்களைச் சந்தித்து அதன் விளைவாய் 30 இலட்சத்து 50 ஆயிரம்பேர் இறந்ததாகப் புள்ளிவிவரம் தெரிவிக்கிறது.

இந்தக் காலகட்டத்தில் இந்தியாவின் சுதேசிப் பொருளாதாரத்திற்கு வித்திட்டவர் இந்தியாவின் முதுபெரும் கிழவர் என்று போற்றப்பட்டவரும் இந்திய தேசியக் காங்கிரஸ் என்ற

விருட்சத்திற்கு வித்திட்டவருமான, தாதாபாய் நௌரோஜி ஆவார். இவர் இலண்டன் நாடாளுமன்றத்தில் இந்திய மக்களுக்காகக் குரல்கொடுத்தவர். வெள்ளைக்காரர்கள் செய்த ஏளனங்களை, அவமானங்களைச் சந்தித்தவர். இந்தியாவின் விடுதலையோடு சேர்ந்து உச்சரிக்கப்பட்ட சுதேசிப் பொருளாதாரம் விடுதலை அடைந்து 50 ஆண்டுகளில் விடுதலை பெற்றுவிட்டது.

மண்ணின் விடுதலை என்பது மக்களின் சுயச்சார்பு பொருளாதார வளர்ச்சியோடும் இணைந்தும் பிணைந்தும் இருக்கின்றது. எல்லைப் புறத்தில் பனிப்பாறையை, மலையை, மண்ணை அந்நியர்கள் ஆக்கிரமித்தால் அதை ஆக்கிரமிப்பு என்று ஒருசேர எதிர்த்துப் போராடுகின்றோம். அதே நேரத்தில் இந்த நாட்டின் நிதிநிலைத் திட்டத்தின் வழியே அந்நிய மூலதனம் ஊடுருவினால் அதுவும் ஒருவகை ஆக்கிரமிப்பே என்பதை எண்ணிப்பார்க்க மறந்துபோய் விடுகின்றோம். இந்திய விடுதலைக் கனவில் கருவாகி இருந்த சுதேசிப் பொருளாதாரம் நனவாகிட, உயிர்ப்போடு உருவாகிட முயற்சி செய்வோம்! மனிதவளம் மலிந்திருக்கும் தேசத்தில் உழைக்கும் மக்களுக்கென விடியலை நோக்கி,

சுதேசிப் பொருளாதாரத்தைச்
சுடரொளி வீசச் செய்வோம்!

(கையொப்பம்)

## சொந்த மூலதனம் சுதந்திரத்தை பாதுகாக்கும்

*நம்முடைய பொருளாதாரம் செழிப்பாக இருக்கவேண்டும். கடன் வாங்கிய காசு கையில் புரளலாம். ஆனால் சொந்தமாகாது. நம்முடைய நாட்டினுடைய சொந்த மூலாதார வளங்கள் பெருகி ஆகவேண்டும். நம்முடைய மூலதனம் பெருகவேண்டும். பன்னாட்டு மூலதனங்களைவிட, சொந்த மூலதனம்தான் தேசத்தின் சுதந்திரத்தைப் பாதுகாக்கும் என்பதை மறந்துவிடாதீர்கள்!*

– அருள்நெறித்தந்தை

(நன்றி : எங்கே போகிறோம்.பக்கம் 20)

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# திருக்குறள் உரை

**(தவத்திரு குன்றக்குடி அடிகளார்)**

## 60. மடியின்மை

மடியின்மை - சோம்பலின்மை. ஊக்கமுடையோர் ஒரோவழி தாம் கருதியன முடியாமையினாலோ, காலந்தாழ்த்தலினாலோ உள்ளம் சோர்வார். அவ்வழி சோம்பல் தோன்றும். இவ்வழி சோம்பலுடையார் எண்ணிக்கை மிகுதி. பிறிதொரு வகையினர் ஊழ், நாள், கோள், நம்பிக்கை வழி சோம்பலுடையராவர். இவ்வகையினர் இன்றைய சமுதாயத்தில் பெரும் பகுதியினர். இவ்விரண்டிலும் சேராது இயற்கையாகவே ஊக்கம் எள்ளளவுமின்றிச் சோம்பித் திரிவோர் உண்டு. இவர்கள் மக்கட் சமுதாயத்திற்குச் சுமை போல்வர்.

மடி - மடமையின் அடிப்படையில் பிறந்த சொல்லாக இருக்கலாமா? ஆய்வு செய்தல் நன்று. அதாவது உயிர் வாழ்க்கை உயிர்ப்புள்ளது. இயக்க வழிப்பட்டது, குறிக்கோளுடையது என்று அறிய வேண்டும். உயிர்ப்புடன் இயங்கி இயக்கி வாழ்தலே வாழ்க்கையென்று அறிந்து வாழாமல் சோம்பித்திரிதல் அறியாமை அல்லவா?

*குடிஎன்னும் குன்றா விளக்கம் மடிஎன்னும்*
*மாசுஊர மாய்ந்து கெடும்.* (601)

தான் பிறந்த குடியாகிய நந்தா விளக்கு ஒருவனுடைய சோம்பலாகிய இருள் வந்து மூடக் கெட்டுப் போகும்.

குடியைக் குன்றா விளக்கென்றது வழித்தோன்றல்கள் வழி, குடிவளர்ந்து விளக்கமாக நிலை பெறுதலின்.

சோம்பலை மாசு என்றது, மாசு பல தீமைகளுக்குப் பிறப்பிடமாதல் போல் சோம்பலும் பல தீமைகளுக்குப் பிறப்பிடமாதலின்.

"குன்றா விளக்கம்" என்ற வாய்பாட்டிற்கு நந்தா விளக்கு என்ற பொருளை விடக் குறையாத விளக்கம் என்று பொருள் கொள்ளுதல் நல்லது.

*மடியை மடியா ஒழுகல் குடியைக்*
*குடியாக வேண்டு பவர்.* (602)

தாம் பிறந்த குடியை மேலும் உயர் குடியாக உயர்த்த வேண்டுவோர் சோம்பலைச் சோம்பலாகவே கருதி முயற்சியோடு வாழ்தல் வேண்டும்.

தாம் பிறந்த குடியை உயர்த்துதல் ஒருவனின் கடமை என்பதைக் குடிசெயல்வகை என்ற அதிகாரத்திலும் கூறுகிறார்.

சோம்பலின்றி முயற்சியுடன் வாழ்பவரின் குடியே உயரும் என்பது கருத்து.

*மடிமடியாக் கொண்டொழுகும் பேதை பிறந்த*
*குடிமடியுந் தன்னினும் முந்து.* (603)

சோம்பலை உடனுறையும் ஒழுகலாறாகக் கொண்டொழுகும் அறிவில்லாதவனின் பிறந்த குடி அவனுக்கு முன்பே அழியும்.

சோம்பலுடையான் பிறந்த குடி அழிவது உறுதி. அதனினும் உறுதி அவன் பிறந்த குடியின் அழிவு அவனுடைய அழிவுக்கு முன்பாகவே நிகழ்வது.

சோம்பலுடையான் பிறந்த குடி அழிதலுக்குக் காரணம் இரக்கம் காரணமாகச் சோம்பலுடையானையும் தாங்கி வாழ்ந்ததினாலேயாம்.

அவனினும் அவன்குடி முந்துற அழியும் என்று கூறியது அவனைத் தாங்கிக் காப்பாற்றிய குடி அழியும் என்றதால் குடி அழிந்தபிறகு இவனைப் போல யாரும் இருக்கமாட்டார். ஆதலால் சோம்பலைத் தவிர்த்திடுக என்பதாகும்.

*குடிமடிந்து குற்றம் பெருகும் மடிமடிந்து*
*மாண்ட உஞற்றி லவர்க்கு.* (604)

சோம்பலின்கண் வீழ்ந்து திருந்திய முயற்சி இல்லாது போனவரின் குடி அழிந்து குற்றங்களும் பெருகும். குடி அழிவதன் மூலம் குற்றம் பெருகும் என்றது அறிவுறுத்துவோர் இலராகப் போதலின் என்றறிக.

*நெடுநீர் மறவி மடிதுயில் நான்கும்*
*கெடுநீரார் காமக் கலன்.* (605)

விரைந்து செய்தலையொழித்துக் காலம் நீட்டித்துச் செய்தல். மறதி, சோம்பல்; மிகுதியான தூக்கம் ஆகியவை கெட்டுப்போக விரும்புபவர்கள் விரும்பி ஏற்கும் அணிகளாகும்.

உரிய காலத்தில் செய்யாது காலந்தாழ்த்திச் செய்தல் காரியக் கேட்டினைத் தரும். காலம் நீட்டித்துச் செய்தல் செய்யாமை போன்றதே.

மறதி - உறவு, பொருள் முதலிய இழப்பைத் தரும்; நெடுந்துயில் - உடலுக்குச் சோம்பலைத் தரும், நோயைத் தரும்.

*படியுடையார் பற்றுஅமைந்தக் கண்ணும் மடியுடையார்*
*மாண்பயன் எய்தல் அரிது.* (606)

நிலம் முழுதும் ஆண்டாரது செல்வம் வந்து எய்திய இடத்தும், அச்செல்வத்தின் பயனைச் சோம்பலுடையார் அடைதல் அரிது.

"படியுடையார் பற்றமைந்தக் கண்ணும்" என்பதில் உள்ள உம்மை, "எய்தாமை" விளக்கிற்று என்பர். இது பொருந்தாது. பரம்பரைச் சொத்துரிமை முறையில் மன்னர் மகன் மன்னராகின்றானே. ஜனநாயக நடைமுறையில் கூட இது சாத்தியமாகிறதைக் காண்கிறோம்.

"பற்றமைந்தக் கண்ணும்" என்பதற்குத் தேடி அடையாத செல்வத்தை அடைந்தபோதும் காக்கும் முயற்சி தோன்றவில்லை என்ற கருத்தில் கூறினார்.

செல்வத்தை அடைதல், அடைந்த செல்வத்தைப் பாதுகாத்தல், அடைந்த செல்வத்தை முறையாகத் துய்த்தல், அடைந்த செல்வத்தை முறையாகச் செலவிடுதல் ஆகிய அனைத்துக்கும் முயற்சி தேவை என்பதனை அறிக.

*இடிபுரிந்து எள்ளும்சொற் கேட்பர் மடிபுரிந்து*
*மாண்ட உஞற்றி லவர்.* (607)

சுற்றத்தார், நட்புடையோர் ஏளனம் செய்து சொல்லும் சொல் கேட்டும் வாளா இருப்பர் செயலில்லாது சோம்பிக் கிடப்பவர்கள்.

இயல்பாக முயற்சி இல்லாதவர்கள் மற்றவர்கள் இகழ்ந்து கூறும் சொல்லினைக் கேட்டுத் தாளாது சோம்பலைத் தவிர்த்து முயற்சியில் தலைப்படுவர். இகழ்ச்சி சொல்லக் கேட்டும் முயற்சியில்

தலைப்படாதாரும் உண்டு. இவர்கள் மானுடப் பிறப்பினைச் சார்ந்த இழிபிறப்புயிர்களாக எண்ணப்படுதல் வேண்டும்.

*மடிமை குடிமைக்கண் தங்கிற்றன் ஒன்னார்க்கு*
*அடிமை புகுத்தி விடும்.* (608)

சோம்பல், சிறந்த குடியில் தோன்றிய ஒருவனிடத்துத் தங்கின் அவனையும் அவன் குடியையும் அவனுடைய பகைவருக்கு அடிமைப்படுத்திவிடும்.

சோம்பல் காரியக் கேடு. காரியக்கேடுகள் நிகழின் ஆற்றலழிந்து அடிமைப்படுதல் நிகழும்.

*குடியாண்மை யுள்வந்த குற்றம் ஒருவன்*
*மடியாண்மை மாற்றக் கெடும்.* (609)

தாம் பிறந்த குடியை வைத்தாளும் தன்மையில் வந்த குற்றம், ஒருவன் தனது சோம்பலை ஆற்றலாக மாற்றக் கெடும்.

"குடியாண்மை" என்ற சொல்லைக் குடி ஆண்மை என்று பிரித்துப் பொருள் கூறுவாரும் உண்டு. இது தவறில்லை. ஆனாலும் தேவையற்றது.

குடியாண்மையாவது தாம் பிறந்த குடியின்மீது மேலாண்மை செய்யக் கூடிய நிலை.

*மடிஇலா மன்னவன் எய்தும் அடிஅளந்தான்*
*தாஅயது எல்லாம் ஒருங்கு.* (609)

சோம்பலில்லாத மன்னவன் எய்துவன், திருமால் தம் அடியினால் அளந்த எல்லா நிலத்தையும் ஒருங்கே.

சோம்பல் இல்லாதார் உலகத்தையே பெறுவர் என்று கொள்க.

(தொடரும்)

## அறிஞர் மா. இராசமாணிக்கனார் நூற்றாண்டு

அறிஞர் மா. இராசமாணிக்கனார் தமிழ்த்தாயின் தவப்புதல்வர்களில் ஒருவர். சைவநெறிக்கும் தமிழ்மொழி வளர்ச்சிக்கும் அவர் ஆற்றியுள்ள தொண்டு நிலைபேறுடையது. அப்பெருமகனாரின் நூற்றாண்டு 2006 மார்ச்சுத் திங்கள் 12ஆம் நாள் தொடங்குகிறது. அவர்தம் நூற்றாண்டுச் சிறப்பிதழாக இந்த "மக்கள் சிந்தனை" இதழ் பெருமையோடு மலர்கிறது. இந்த இதழில் அறிஞர். மா. இராசமாணிக்கனார் பற்றிய அவர் திருமகனார் டாக்டர். இரா.கலைக்கோவன் எழுதிய அரியதொரு கட்டுரை இடம் பெறுகிறது. அவர்தம் திருவுருவப் படம் அட்டைப்படமாக அணி செய்கிறது.

-ஆசிரியர்

# ஒரு வரலாற்றின் வரலாறு

(டாக்டர்.இரா. கலைக்கோவன்)

இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் தோன்றித் தமிழ் வளர்த்த அறிஞர்களுள் குறிப்பிடத்தக்கவர் இராசமாணிக்கனார். தமிழுடன் மிகுதியான தொடர்போ, தமிழில் தனித்த ஈடுபாடோ இல்லாத ஒரு தமிழ்க் குடும்பத்தில் பிறந்து, இளம் வயதில் தெலுங்கு மொழியிலேயே பயின்று வளர்ந்தவரான அவர் பின்னாளில் தமிழ் வளர்த்த செம்மலாக மலர்ந்தமை வியப்பும் சுவையும் நிரம்பிய நெடிய வரலாறாகும்.

நிலம் அளந்து தரம் விதிக்கும் அலுவலகத்தில் ஒரு பிரிவின் மேலாளராக இருந்து, வட்டாட்சியராக உயர்ந்தவரான மாணிக்கம் என்பவரின் கடைசி மகனாகத் தோன்றியவர் இராசமாணிக்கனார். பணி நிமித்தம் பல்வேறு ஊர்களுக்கு மாறிய மாணிக்கம், கர்நூலில் வாழ்ந்த போது 1907 ஆம் ஆண்டு மார்ச்சு திங்கள் 12ஆம் நாள் இராசமாணிக்கனார் பிறந்தார். இவரது அன்னை பெயர் தாயாரம்மாள். ஏழு பேர் பிறந்த குடும்பத்தில் இராசமாணிக்கனாரும் அவர் தமையனார் இராமகிருட்டிணருமே எஞ்சினர்.

அரசு பணியாளரான தந்தையாரின் அலுவல் மாற்றம் காரணமாக இராசமாணிக்கனாரின் கல்வியும் பல ஊர்களில் வளர்ந்தது. பல ஆண்டுகள் தெலுங்கு நாட்டில் கர்நூல், சித்தூர் முதலிய ஊர்களில் இருக்க நேரிட்டதால் தெலுங்கு மொழியே பயின்று வந்த இவர், 1916இல் தந்தையார் மதுரை மாவட்டத்தைச் சேர்ந்த நிலக்கோட்டைக்கு மாற்றப்பட்ட பிறகே அதாவது, தம்முடைய ஒன்பதாவது வயதிலிருந்துதான் தமிழ் பயிலத் தொடங்கினார்.

1917ல் தந்தையார் மறைவிற்குப் பிறகு தமையனாருடன் அவர் பணிமாற்றம் பெற்ற இடங்களுக்கெல்லாம் உடன் சென்றமையால் இராசமாணிக்கனாரின் கல்வி தடைபட்டது. 1921ல் தஞ்சாவூரில் தமையனார் பணியமர்ந்தபோது அங்கிருந்த செயிண்ட் பீட்டர்ஸ் பள்ளியில் ஆறாம் வகுப்பில் சேர்ந்த இவர், தொடர்ந்து பள்ளியிறுதி வகுப்புவரை அங்கேயே பயின்றார். ஆண்டுதோறும் முதல் மாணவராகத் தேறியதால் தலைமையாசிரியரின் கவனிப்பும் அன்பும் கிடைத்தன. ஆந்திர மாநிலத்திற்கு மாற்றலாகிச் சென்ற அண்ணன் அனுப்பிய உதவித்

தொகை கல்வி பெறப் போதுமானதாக அமையாமையின், பள்ளி மாணவர்கள் சிலருக்குப் பாடம் எடுத்து அதன் வழி பெற்ற வருவாயில் வாழ்க்கையை நகர்த்தினார் இராசமாணிக்கனார்.

கரந்தைக் கவியரசு ரா. வேங்கடாசலம் இவர் மீது அன்பு பாராட்டித் தமிழ் இலக்கண, இலக்கியங்களைக் கற்பித்தார். கரந்தைத் தமிழ்ச் சங்கப் பெரியவர்களுடன் ஏற்பட்ட நட்பு இவர் தமிழார்வத்தை வளர்த்தது. 1927 மார்ச்சில் பள்ளியிறுதித் தேர்வு முடித்தவர், 1928இல் சென்னை வண்ணாரப்பேட்டையிலிருந்த தியாகராயர் நடுநிலைப் பள்ளியில் தமிழாசிரியராகப் பணியமர்ந்தார். அங்கு பணியாற்றிக் கொண்டே மாணவர்க்கான துணைப் பாடநூல்களையும் பாடநூல்களையும் எழுதும் பணியிலும் ஈடுபட்டார். இவர் எழுதிய முதல் நூல் 1930இல் வெளிவந்தது. அப்போது இராசமாணிக்கனாருக்கு வயது 23. கல்வித் தகுதி வெறும் எஸ்.எஸ்.எல்.சி. மட்டுமே. கே. பழனியாண்டிப்பிள்ளை கம்பெனியின் மூலம் வெளியிடப்பட்ட 102 பக்க அளவிலான "நாற்பெரும் வள்ளல்கள்" என்னும் அந்நூல் அதிக அனுபவமோ, ஆழ்ந்த பயிற்சியோ, பெரிய கல்வித் தகுதியோ இல்லாத ஒருவரால் எழுதப்பட்டதெனக் கருதமுடியாதபடி கருத்துக் கருவூலமாய் அமைந்துள்ளமை அந்த இளம் வயதிலேயே இராசமாணிக்கனார் பெற்றிருந்த புலமையைப் பறைசாற்றுவதாய் உள்ளது.

பள்ளி ஆசிரியராக நிலையானதொரு பணியில் அமர்ந்த நிலையில் 1930 செப்டம்பர் ஒன்பதாம் நாளில் திரு. துரைசாமி, திருமதி. ஜெயலெட்சுமி மகளார் கண்ணம்மாளை மணந்தார். அப்பொழுது இவருக்கு வயது 23. மணமகளுக்கு வயது 14.

1935இல்தான் இராசமாணிக்கனார் வித்துவான் பட்டம் பெற்றார். ஆனால், அதற்குள் பல நூல்களை அவர் எழுதி வெளியிட்டிருந்தார். ஏறக்குறைய எட்டு ஆண்டுகள் தியாகராயர் நடுநிலைப்பள்ளியில் பணியாற்றிய பிறகு, 1936ஆம் ஆண்டு ஜூலையில் சென்னை, முத்தியாலுப்பேட்டை உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராகப் பொறுப்பேற்றார். அங்கு இருந்த காலத்தில் (1936 ஜூலை முதல் 1947 ஜூன் முடிய) பள்ளிக்குரிய பாடநூல்களை எழுதி வெளியிட்டதோடு, பி.ஓ.எல் (1939), எல்.டி. (1944), எம்.ஓ.எல். (1945) என்னும் பட்டங்களும் பெற்றார். எம்.ஓ.எல். பட்டத்திற்குப் பெரியபுராணத்தைச் சிறந்த முறையில் ஆய்வு செய்து, "பெரியபுராண ஆராய்ச்சி" என்ற தலைப்பில் தம் ஆய்வேட்டை அளித்தார். அந்த ஆய்வேட்டின் திருத்திய பதிப்பே பின்னாளில், "பெரியபுராண ஆராய்ச்சி" என்னும் தலைப்பில் நூலாக வெளியாகியது.

முத்தியாலுப்பேட்டை உயர்நிலைப்பள்ளியில் இராசமாணிக்கனார் பணியாற்றிய காலத்தில் தான் அவருடைய சிறப்புக்குரிய பல நூல்கள் வெளிவந்தன. அவை, "மொஹெஞ்சொ-தரோ அல்லது சிந்துவெளி நாகரிகம்" (1941), "பல்லவர் வரலாறு" (1944), "சேக்கிழார் - ஆராய்ச்சி நூல்" (1945), "சோழர் வரலாறு" (1947) என்பனவாம்.

தியாகராயர் பள்ளியிலும் முத்தியாலுப்பேட்டைப் பள்ளியிலும் பணியாற்றிய காலத்தில் சுயமரியாதை இயக்கத்தில் பற்றுக் கொண்டு, சீர்திருத்தப் பணிகளில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டார். தமிழர் திருமணத்தில் சடங்குகள் பெருகிச் செலவுகளும் மிகுந்த நிலையில் பல குடும்பங்கள் கடன் சுமையால் துன்பப்பட்டமையைக் கண்ணுற்ற இராசமாணிக்கனார் மனம் வருந்தினார். அச்சமயத்தில் "தமிழர் நல்வாழ்க்கைக் கழகம்" என்ற அமைப்பு இராசமாணிக்கனாரிடம், "தமிழர் திருமண நூல்" ஒன்றை இயற்றித் தருமாறு வேண்டியது, பழந்தமிழர்தம் எளிய திருமணமுறைகளை உரிய சான்றுகளோடு எடுத்துக்காட்டி 1939இல் அந்நூலை வெளியிட்டார். பலரின் போற்றுதலுக்கும் பாராட்டுதலுக்கும் உரியதாயிற்று அந்நூல்.

சமுதாயச் சீர்திருத்தப் பணிகளில் ஒன்றியிருந்த காலத்திலும் இராசமாணிக்கனார் தமிழ்த் தொண்டை மறக்கவில்லை. வண்ணையம் பதியில் தனலட்சுமி தொடக்கப்பள்ளியில், பேராசிரியரின் தமிழ்த் தொண்டு தொடங்கியது. வகுப்புகள் நடத்துவார். அங்கு சில அன்பர்கள் இவர் பணிகளுக்குத் தொண்டர்களாக விளங்கினர். சொந்தப் பணத்தைச் செலவு செய்து இவ்வகுப்புகளை நடத்தி ஏழை, எளிய மாணவர்களுக்குக் கல்வித் தொண்டு புரிந்த இராசமாணிக்கனார், "இளம் பருவத்தில் கல்விபெற நான் பட்ட துன்பங்களே இப்பணியைத் தொடங்கவும் தொடர்ந்து நடத்தவும் என்னை ஊக்கின. நல்ல உள்ளம் படைத்த இளைஞர்கள் எனக்குத் துணைநின்றனர். மனம் இருந்தால் பணம் ஒரு பொருட்டாக அமையவில்லை" என்று தம் வாழ்க்கைக் குறிப்பில் எழுதியிருப்பது குறிப்பிடத்தக்கது.

1947 ஜூலை முதல் 1953 ஜூலை வரையில் விவேகானந்தர் கல்லூரியில் பணியிலிருந்தபோது தான் "சைவ சமய வளர்ச்சி" என்னும் தலைப்பில் டாக்டர் பட்டத்துக்குரிய ஆராய்ச்சியைச் செய்து 1951ல் அப்பட்டத்தையும் பெற்றார். தமிழ்நாட்டின் பல மாவட்டங்களுக்கும் நேரில் சென்று அங்குள்ள ஊர்களில் களஆய்வு செய்தும், தேவையான நூல்களைப் படித்தும் வெளிவந்த பிறகே தம்முடைய பெரியபுராண ஆராய்ச்சி, சைவ சமய வளர்ச்சி ஆய்வுகளை முழுமையுறச் செய்ய முடிந்ததாக அவர் குறிப்பிட்டுள்ளார்.

இருபத்தைந்து ஆண்டு கால 'சென்னை வாழ்க்கையில்' (1928-1952) இராசமாணிக்கனார் ஆற்றிய பணிகளும் அடைந்த வெற்றிகளும் பெருமைக்குரியவை. பள்ளி இறுதித் தேர்வில் தேறியவராக வந்தவர், உயர்ந்த பல பட்டங்களைப் பெற்ற இடம் சென்னை. சீர்திருத்தம் பற்றிய கனவுகளோடு வந்தவர் அவற்றை நனவாக்கி வெற்றி கண்ட இடம் சென்னை. "சமயம் போற்றுதலுக்கு உரியது, சமய ஊழல்கள் களைதலுக்கு உரியன" என்னும் எண்ணத்தோடு வந்தவர், தம்முடைய இக்கொள்கையைப் பரப்பத் தொடங்கிய இடம் சென்னை. எழுத்தில் ஆர்வத்தோடு வந்தவர், எழுத்தாளராக மலர்ந்த இடம் சென்னை.

நீண்ட காலம் சென்னையில் வாழ்ந்த இராசமாணிக்கனாரை 1953இல் மதுரை வரவேற்றது. 1953ஆம் ஆண்டு ஆகஸ்டு முதல் 1959ஆம் ஆண்டு ஆகஸ்டு வரையில் அங்கு, தியாகராசர் கல்லூரியில் தமிழ்த்துறைத் தலைவராகப் பணியாற்றினார். மதுரையில் வாழ்ந்தபோது அங்கு எழுத்தாளர் மன்றம் உருவாவதற்குப் பெருந்துணையாயிருந்தார். அதன் தலைவராகவும் விளங்கினார். மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் பாடத் திட்டங்களை மாற்றியமைத்து அதன் சார்பில் சென்னைப் பல்கலைக் கழக வித்துவான் தேர்வுக்கு மாணவர்களை அனுப்பச் செய்யும் முயற்சியில் ஈடுபட்டார். எழுத்துப் பணி மதுரையிலும் தொடர்ந்தது. இக்காலகட்டத்தில் ஏறத்தாழ நாற்பது நூல்கள் இராசமாணிக்கனாரால் எழுதப்பட்டன. இவர் தலைமையேற்று நடத்திவைத்த திருமணங்களும், கலந்துகொண்டு சொற்பொழிவு ஆற்றிய நிகழ்ச்சிகளும் கணக்கற்றவை.

மதுரையில் இருந்தபோது தமிழ்நாடெங்கும் பயணித்து இராசமாணிக்கனார் ஆற்றிய சொற்பொழிவுகள் இலக்கிய நுகர்வையும் சமய, சமூக சீர்திருத்த மனப்பாங்கையும் மக்களுக்கு ஊட்டுவனவாக அமைந்தன. எளிய நிலையில் அமையவேண்டிய தமிழர் திருமணம், இலக்கியங்கள் சுட்டும் தமிழர் வாழ்வு, உழைப்பின் உயர்வு, சாதி, சமயப் பூசலற்ற - ஏற்றத் தாழ்வுகள் கருதாத தமிழ்ச் சமூகம் என்பனவே பெரும்பாலும் அவர் பொழிவுப் பொருள்களாக அமைந்தன. எளிய, இனிய நடையில் நகைச்சுவை உணர்வு பொங்க ஆற்றொழுக்காகப் பேசும் ஆற்றல் இவருக்கு இருந்ததால் உரை கேட்டவர்கள் இவர் வயமாயினர்.

பள்ளி, கல்லூரி அளவிலான பாடப்புத்தகக் கட்டுரைகளாலும் துணைப்பாட நூல்களாலும் இத்தகு பயன்தரு பொழிவுகளாலும் இராசமாணிக்கனார் நாடறிந்த நல்லறிஞராகத் திகழ்ந்தார். இவரது பணிகளைப் பாராட்டிக் கோயமுத்தூர் திருவள்ளுவர் கழகம் 1956 ஆகஸ்டு 26இல் பெருமைக்குரிய பாராட்டு விழாவொன்றை அமைத்தது.

1959 செப்டம்பர்த் திங்களில் சென்னைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்த் துணைப் பேராசிரியராகப் பொறுப்பேற்ற இவ்வறிஞர் 1967 முடிய அப்பணியில் இருந்தார். பணியிலிருந்த முதல் ஐந்தாண்டுகளில் சங்கத் தமிழ் இலக்கியமான பத்துப்பாட்டை ஆய்வு செய்து, "பத்துப்பாட்டு ஆராய்ச்சி" என்ற பெயரில் நூலாக்கி, பல்கலைக் கழகத்திடம் ஒப்புவித்தார். அவ்வரிய ஆராய்ச்சி நூல் பின்னால் (1970) பல்கலைக் கழகத்தாரால் வெளியிடப்பட்டது.

திருச்சிராப்பள்ளி, சென்னை வானொலி நிலையங்கள் இராசமாணிக்கனாரின் பல பொழிவுகளை மக்களுக்கு வழங்கின. இலங்கை வானொலியில் உரையாற்றவும் இலங்கைத் தமிழ் மன்றங்களில் பொழிவாற்றவும் விரும்பி அழைக்கப்பெற்றதால் இருமுறை இலங்கை சென்று வந்தவர் இவ்வறிஞர். இவரது ஆய்வுப் பணிகளைப் பெரிதும் போற்றிய தமிழ்நாடு அரசு 1966இல் மலேசியாவின் தலைநகரான கோலாம்பூரில் நடைபெற்ற இரண்டாம் உலகத் தமிழ் மாநாட்டிற்குத் தேர்ந்தெடுத்து அனுப்பிய மிகச் சில தமிழறிஞர்களுள் இராசமாணிக்கனாரையும் ஒருவராகக் கொண்டது.

சமயத் துறையில் இவர் ஆற்றிய பணிகளில் மனம் நிறைந்த திருவாவடுதுறை ஆதீனம், "சைவ வரலாற்று ஆராய்ச்சிப் பேரறிஞர்" (1951) என்னும் பட்டத்தையும் மதுரை திருஞானசம்பந்தர் ஆதீனம், "ஆராய்ச்சிக் கலைஞர்" (1955) என்னும் பட்டத்தையும் தருமபுர ஆதீனம், "சைவ இலக்கியப் பேரறிஞர்" (1963) என்னும் பட்டத்தை அளித்து உடன் பொற்பதக்கமும் பொன்னாடையும் வழங்கி மகிழ்ந்தன. சைவ சித்தாந்த சமாஜம், "சைவ நெறிக் காவலர்" (1959) என்னும் பட்டத்தை வழங்கியது.

பல பல்கலைக்கழகங்களில் தலைமைத் தேர்வாளராகவும் பாடத் திட்டக்குழுத் தலைவராகவும் விளங்கிய இவ்வறிஞர் மாணவர் நலத்தில் மிகுந்த அக்கறை கொண்டிருந்தார். பாடத் திட்டங்களை வகுப்பதிலும் தேர்வுகளுக்கான வினாத்தாள்களைத் தயாரிப்பதிலும் மாணவர்களின் விடைத் தாள்களைத் திருத்துவதிலும் அவர் கொண்டிருந்த பொறுப்புணர்ச்சி குறிப்பிடத்தக்கது. "தமிழ்ப் பாடத்தில் மாணவர்களுக்கு அவரவர் தகுதிக்குரிய மதிப்பெண்களைத் தருவதில் தயக்கம் கூடாது. இந்த அளவிற்கு மேல் உயர்ந்த மதிப்பெண் மொழிப் பாடத்தில் கூடாது எனும் போக்குத் தவறானது. மாணவர்கள் சிறப்பாக விடையெழுதி யிருந்தால் உரிய உயரிய மதிப்பெண்களை வழங்கிடல் வேண்டும். அப்போதுதான் தமிழ்ப் பாடத்தைத் தயங்காது தேர்ந்துகொள்ள மாணவர்க்கு ஊக்கம் பிறக்கும்" என்பது இராசமாணிக்கனாரின் கருத்தாக

இருந்தது. இதனால், சிறப்புத் தமிழ் மாணவர்கள் 1960களிலேயே தமிழ்ப் பாடத்தில் உயர்ந்த மதிப்பெண்களைப் பெறமுடிந்தது.

இராசமாணிக்கனாரின் குடும்பம் தமிழ் மணம் கமழும் குடும்பமாகும். தாம் உயர்ந்ததோடு நிறைவடையாத இராசமாணிக்கனார் தம் துணைவியாருக்கும் தமிழ் கற்றுத்தந்து அவரையும் புலவராக, ஆசிரியராக வளர்த்தார். 1947இல் வித்துவான் பட்டம் பெற்ற திருமதி. கண்ணம்மாள் இராசமாணிக்கனார் சென்னையில், மண்ணடிப்பகுதியில் இருந்த சி.எஸ்.எம். பெண்கள் நடுநிலைப்பள்ளியில் சில ஆண்டுகளும் பின்னர் மதுரையில், பாத்திமா கல்லூரியில் சில காலமும் தமிழாசிரியராகத் திறமையோடு பணிபுரிந்தார்.

மனைவியைக் கல்வியில் வளர்த்தாற் போலவே தம் எட்டுக் குழந்தைகளையும் - ஆண், பெண் என்ற வேற்றுமை பாராது உயர்கல்வியில் தேர்ச்சிபெறச் செய்தவர் இராசமாணிக்கனார். திருச்சிராப்பள்ளியில் கண் மருத்துவராகப் பணிபுரியும் ஒருவர் நீங்கலாக ஏனையோர் பல்வேறு கல்லூரிகளிலும் பள்ளிகளிலும் தமிழ்ப் பணியாற்றியவர்கள். "நல்ல குடும்பம் ஒரு பல்கலைக் கழகம் என்று புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் படம்பிடித்துக் காட்டியது மிகையல்ல என்று மெய்ப்பிக்கிறது இராசமாணிக்கனாரின் குடும்பம்" என்பார் நெ.து.சுந்தரவடிவேலு.

இத்துணை சிறப்புக்களை ஈட்டிப் புகழ் படைத்திருந்த இராசமாணிக்கனார் தம் உடல் நலத்தையும் ஒழுங்காகவே பேணி வந்தார். ஆயினும் உழைப்பின் மிகுதியாலும், ஆராய்ச்சிகளாலும் கள ஆய்வுகளுக்காகப் பல ஊர்களுக்குச் சென்றுவந்த காரணத்தாலும் இவர்தம் உடல் ஐம்பத்தொன்பதாம் வயதில் சிறிது தளர்ச்சி அடைந்தது. இதய நோய் உண்டாகித் துன்புறுத்தியது. உடனே மருத்துவமனைக்குச் சென்று மருத்துவஞ் செய்து கொண்டதனால் உடல் நலம் பெற்றார். அடுத்த ஆண்டும் அங்ஙனமே இதய நோய் வந்தது. 26.5.1967 வெள்ளிக்கிழமை அன்று பேராசிரியர் இவ்வுலக வாழ்வை நீத்தார்.

பொறுப்புடைய குடும்பத் தலைவராகவும் கல்வியாளராகவும் சமுதாய சீர்திருத்தச் சிந்தனையாளராகவும் மாணவர் நலன் நோக்கிய எழுத்தாளராகவும் அறிவியல் அணுகுமுறைகளைப் பயன்படுத்திய ஆராய்ச்சியாளராகவும் தமிழுலகும் வரலாற்றுலகும் இணைந்து போற்றிய பேராசிரியப் பெருந்தகையாகவும் சமயத் தூய்மை கருதிய சிவநெறிச் செல்வராகவும் பிறர்க்கு உதவும் பண்பாளராகவும் விளங்கிய டாக்டர் மா.இராசமாணிக்கனார் தமிழ் உள்ளளவும் தமிழர் உள்ளத்தில் நீங்காதிருப்பார்.

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# "கம்பன் என்றொரு மானிடன்"

(தமிழாகரர்.பேராசிரியர்.சாமி. தியாகராசன்)

"சித்திரப் பத்தியின் தேவர் சென்றனர்
இத்துணைத் தாழ்த்தனம் முனியும் என்றுதம்
முத்தினா ரங்களும் முடியின் மாலையும்
உத்த ரீயங்களும் சரிய ஓடுவார்"

-சுந்தரகாண்டம் - ஊர்தேடுபடலம்.51

உள்ளத்தில் ஏற்படும் உணர்ச்சி மெய்யில் புலப்படும். இதனையே மெய்ப்பாடு என்பர். இந்த மெய்யிலும் நம் உள்ளத்து உணர்ச்சிகளை வெளிப்படுத்துவது முகமேயாகும். இதனால் அன்றோ வள்ளுவரும்

*"அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்*
*கடுத்தது காட்டும் முகம்"* - என்கிறார்.

எவ்வளவு பெரிய மனிதருக்கும் தம் உள்ளத்தில் சென்று ஊன்றும் இன்ப துன்பங்களைச் சமப்படுத்திக் கொள்வது என்பது இயலாத ஒன்று. அவ்வாறு சமப்படுத்திக்கொள்ளும் ஆற்றலுடையவர்கள் இருப்பார்களேயானால் அவர்களே நமது வணக்கத்துக்குரியவர்கள்.

மிக அழகிய காந்தத் தன்மையுடைய முகத்திற்குத் தாமரைப் பூவை உவமையாகச் சொல்வது கவிமரபு. ஆனால் தாமரை மலர் காலையில் மலர்ந்து மாலையில் கூம்பும் தன்மை உடையது. மலர்தலும் கூம்பலும் இல்லாத தாமரைப்பூ உலகில் இல்லை. அத்தகைய தாமரையை வேண்டுமானால் சித்திரத்தில் எழுதி அமைக்க வேண்டும். சித்தன்னவாசலில் காணப்படும் பல்லவர் காலத்து ஓவியத்தில் உள்ள தாமரையை நினைவு கூரலாம்.

உலக முழுதாளும் அரசச் செல்வத்தை நீ அடைவாயாக என்று தந்தையாகிய தசரதன் சொன்ன காலத்திலும், நாடாளும் செல்வம் உனக்கில்லை, மாறாக நீ காடாள வேண்டும் எனத் தாயாகிய கைகேயி

சொன்ன காலத்திலும் இராமனது உள்ளத்து உணர்ச்சி ஒருப்படித்தாகவே இருந்தது என்பதை நமக்கு உணர்த்த விரும்பிய கம்பனுக்குச் சித்திரம் நினைவுக்கு வருகின்றது. அதுவும் மலர்ந்து பின் கூம்பாத சித்திரத் தாமரை நினைவுக்கு வருகின்றது.

தந்தை கூறியபோதும் தாய் சொன்ன போதும் ஒரே நிலையில் இருந்த இராமனது முகமண்டலத்தின் அழகு மலர்தலும் கூம்புதலும் இல்லாமல் சித்திரத்தில் எழுதி வைக்கப்பட்ட மலர்ந்த தாமரை மலரை ஒத்திருந்தது எனவும் அத்தகைய சித்திரத் தாமரையை ஒத்திருந்த அவன் முகத்தினை அசோக வனத்தில் தனியே இருந்து தவிக்கும் சீதை எண்ணி எண்ணிப் பார்க்கிறாள் எனவும் கம்பன் தீட்டிக் காட்டியுள்ள செய்யுள் இதுதான்.

"மெய்த்தி ருப்பதம் மேவென்ற போதிலும்
இத்தி ருத்துறந் தேகென்ற போதிலும்
சித்தி ரத்தின் அலர்ந்த செந்தாமரை
ஒத்தி ருக்கும் முகத்தினை உன்னுவாள்"

சுந்தரகாண்டம் - காட்சிப்படலம்.20

இராமனுடைய படைகள் இலங்கைக்குள் நுழைந்து பாடி வீடு அமைத்துவிட்டன. இராமனைத் தோற்கடிக்க வேண்டும். என்ன செய்வதென்று இராவணன் உரியவர்களை அழைத்து ஆலோசனையில் ஈடுபட்டிருக்கின்றான். அவ்வாலோசனைக் கூட்டத்தில் இந்திரசித்தும் இருக்கின்றான். அங்கு கூடி உள்ளவர்களில் அவனே இளைஞன். ஆனால் வலியன். இந்திரசித்து எழுந்து தன் தந்தையை வணங்கி, வந்துள்ள இராமனையும் அவன் இளவல் இலக்குவனையும் படைகளையும் தான் ஒருவனே நின்று வெற்றி கொள்வேன் என்று வீரம் பேசுகின்றான். அப்போது வீடணன் எழுந்து இந்திரசித்தைப் பார்த்து,

"செய்ய வேண்டுவது யாது என்பதை அறிய
இயலாத இளமைப்பிராயத்தை உடையவனே!
கருத்து இல்லாதவனும் (சிந்திக்க இயலாதவன்)
கண்ணில்லாதவனுமாகிய ஒருவன் கைக்கொண்டு
எழுதப் புகுந்த சித்திரத்தை ஒப்பதான
பேச்சுக்களைப் பேசுகிறாய். வயது முதிர்ந்தவரும்
மேன்மையான குணங்களை உடையவரும்

செய்தொழில் வல்லவருமான பெரியோர் செய்கின்ற
மந்திராலோசனைக் சபையிலே நீ இருத்தற்கு
உரிமை உடையயோ"

என்று கண்டித்துப் பேசுகின்றான்.

இதுவரை கருத்தும் கண்ணும் கையும் ஒருங்கு சேர்ந்த சித்திரக்காரன் தீட்டிய சித்திரங்களை உதாரணம் காட்டித் தன் கருத்துக்களை அவற்றில் ஏற்றி மெருகு ஊட்டிப் போந்த கம்பன் இங்கே கருத்தும் கண்ணும் இல்லாத ஒருவன் தீட்டப் புகுந்த சித்திரத்தை உதாரணம் காட்டுகின்றார்.

கருத்தும் இல்லாமல் கண்ணும் இல்லாமல் வெறும் கை மட்டுமே கொண்டு ஒருவனால் சித்திரம் எழுத முடியுமா? அவன் சித்திரம் எழுதுவேன் என எழுதினாலும் பிறர் அதைச் சித்திரம் என ஒப்புவார்களா? அவன் முயற்சி வீண்தானே! என்று வீடணன் கூற்றில் வைத்துக் கம்பர் கூறும் அறிவுரை இந்திரசித்துப் போன்ற இக்கால இளைஞர்களுக்கும் பொருந்தும் திறத்தை எண்ணிப் பார்க்க வேண்டும். கம்பன் வடிவமைத்த அந்தச் சித்திரச் செய்யுளைக் காண்போம்.

"கருத்திலான் கண்ணிலான் ஒருவன் கைகொடு
திருத்துவான் சித்திர மனைய செப்புவாய்
விருத்தர்மே தகையவர் வினைஞர் மந்திரத்து
இருத்தியோ இளமையான் முறைமை எண்ணிலாய்"

யுத்த காண்டம் - இராவணன் மந்திரப்படலம்.67

இந்தப் பாடலில் காணப்படும் முதலிரண்டு தொடர்களுக்கு, சிறந்த ஓவியன் ஒருவன் ஏற்கனவே வரைந்த சித்திரத்தைக் கருத்தும் கண்ணும் இல்லாத ஒருவன் திருத்தி எழுதப் புகுவதற்கு ஒப்பதான பேச்சுக்களை பேசுகிறாய் என்று பொருள் சொல்வாரும் உண்டு.

ஓவியர்களால் வெளியில் தீட்டப்படும் சித்திரங்களைத் தன் கருத்திற்கு ஏற்றவாறு கொண்டு அவற்றைத் தன் காவியத்தில் பதிய வைத்துப் படிப்போர் உள்ளத்திரையில் படமாக ஓடவிட்டு அழியா வண்ணம் அவற்றைப் பதிவு செய்துள்ள கம்பனின் சித்திரச் செய்யுட்களைக் "கம்ப சித்திரம்" எனக் கூறின் தடை சொல்வார் உண்டோ?

(தொடரும்)

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# திருவள்ளுவம் பரவாமைக்குக் காரணங்கள்

(க.ப. அறவாணன், துணைவேந்தர்)

*தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார் அவர்கள் தலைமையில் புதுக்கோட்டை உலகத் திருக்குறள் பேரவை மாநாட்டில் 22.01.06 அன்று நிகழ்த்திய உரை*

மக்கள் வளரவும், திருந்தவும் சிந்தித்த தமிழ் மேதைகள் அவற்றைப் படைத்த அளவில் ஒதுங்கிக் கொண்டனர். பலர் காடுகளில் தவம் மேற்கொண்டு ஒதுங்கிக் கொண்டனர். சித்தர்கள் பொதுமக்களுடன் உறவாடுவதில்லை. இதே மரபுதான் சைவத் திருமடங்கள் தமிழகத்தில் தோற்றுவிக்கப்பட்டபோதும் மடாதிபதிகளால் பின்பற்றப்பட்டது. மடாதிபதிகள், பொதுமக்கள் இருக்கும் இடம் நோக்கிச் செல்வதில்லை. பொதுமக்களே மடாதிபதிகள் இருக்கும் இடம் வந்து ஆசிபெற்றுச் செல்லுதல் வேண்டும். ஆண்டுக்கு ஒருமுறை பொதுமக்கள் தரிசிப்பிற்காக மடாதிபதிகளுடைய பட்டணப் பிரவேசம் நிகழும் (இந்த மரபை முதன் முதல் உடைத்தெறிந்து மக்களை நேருக்கு நேர் சந்தித்துச் சமூகத் தொண்டாற்றியவர் மறைந்த குன்றக்குடி அடிகளார் ஆவார்). புத்தர், இயேசு கிறித்து முதலானோர் போன்று அன்னோர் மக்களோடு மக்களாகச் சேர்ந்து உறவாடுவதில்லை. கிட்டத்தட்ட திருவள்ளுவரும் சித்தர் போன்ற ஒரு வாழ்க்கை முறையையே கடைபிடித்திருக்க வேண்டும். அவர்தம் கருத்துகள் பொதுமக்களிடம் சென்று சேராமைக்கு இஃது ஒரு முதன்மைக் காரணம்.

## 2. புறக்காரணங்கள்

திருவள்ளுவக் கருத்தை அவர் காலத்தும், அவருக்குப் பின்பும் ஆண்ட அரசியலார் அறிந்திருத்தல் வேண்டும். கி.பி. இரண்டாம் நூற்றாண்டு முதல், இருபதாம் நூற்றாண்டின் தொடக்கக் காலம் வரை திருக்குறளைத் தமிழரசர்கள் யாரும் முன்னிலைப்படுத்தவில்லை. மாறாக, சாதிக்கு ஒரு நீதி பேசிய மனுஸ்மிருதி, ரிக் முதலான நான்கு ஆரிய வேதங்கள் வடமொழியில் எழுதப்பட்ட மகாபாரதம், இராமாயணம் முதலானவற்றைத் தமிழ் மன்னர் தம் நீதி சொல்லும் இடங்களிலும், அரசியல் களங்களிலும், கல்வெட்டுகளிலும், இலக்கியங்களிலும் போற்றிப்

பதிவு செய்துள்ளனர். தமிழ் அரசர் தம் பெயர்களையே மனு என்று வைத்துக்கொண்டனர். தமிழ் அரசர்கள் திருக்குறளைப் புறக்கணித்ததற்கான காரணங்கள் இருக்கின்றன. தமிழ்நாட்டை ஆண்ட அரசர்கள் பெரும்பாலும், தமிழ்க் குடியினராக இல்லை. அவர்கள் ஆந்திரர்களாகவோ, கன்னடர்களாகவோ, இசுலாமியர்களாகவோ, மராத்தியர்களாகவோ, வட இந்தியர்களாகவோ இருந்தனர். இடை இடையே இருந்த ஓரிரு தமிழ் அரசர்களும் தமிழ் மரபுக்கு மாறான ஆரிய மரபுகளுக்கு முற்றும் அடிமைப்பட்டுப் பின்பற்றுபவோராக இருந்தனர்.

திருக்குறளைப் போற்ற முடியாதபடிக்குத் திருவள்ளுவரும் சமகால அரசர்களையும், அரசர்களின் அரசியலையும் கண்டித்துத் தம் திருக்குறளை வரைந்துள்ளார். தம் சமகால அரசியலை முற்றுமாகத் திருவள்ளுவர் வெறுத்திருக்க வேண்டும், எதிர்த்திருக்க வேண்டும். ஓரிரு சான்றுகள் வருமாறு.

திருவள்ளுவர் அரசியலைப் பேசும் பொருட்பால், இறைமாட்சி என்ற அதிகாரத்தில் (39) தொடங்குகிறது. கயமை (108) எனும் அதிகாரத்துடன் நிறைவுறுகிறது. இதனுடைய உட்பொருள் இறைமாட்சி என்றால் அரசியல். அரசியலில் தொடங்குவது கயமையில் முடியும் என்ற கருத்தை மறைமுகமாகத் திருவள்ளுவர் கொண்டிருந்தமையையே இந்த அதிகார வைப்புக் காட்டுகிறது. அன்றியும், திருவள்ளுவர் முற்கால அரசர்கள் பின்பற்றிய தந்தை - மகன் என்ற வாரிசு உரிமையை எங்கும் ஒப்புக்கொள்ளவில்லை. அரசன், பெரியோரையும் (அதி. 45,46,90,99) சான்றோரையும் தழுவித்தான் அரசை நடத்த வேண்டும் என்று வற்புறுத்தினார். அரசர், கட்டாயம் கல்வி கற்றிருக்க வேண்டும் என்று கருதினார். எனவேதான்,

> தூங்காமை கல்வி துணிவுடைமை இம்மூன்றும்
> நீங்கா நிலன்ஆள் பவர்க்கு. (338)

என்று வற்புறுத்தினார். கல்வி (40), கல்லாமை (41), அறிவுடைமை (43) முதலான அதிகாரங்களையும் அரசியலில் வைத்துப் போற்றினர். சாதி அடிப்படையையும், பிறப்படிப்படையில் வர்ணாசிரம ஏற்றத் தாழ்வையும் ஒப்புக்கொண்டிருந்த அக்கால அரசியலில் திருவள்ளுவர் பிறப்பு அடிப்படையில் மக்களைப் பிரிப்பதைக் கடுமையாக எதிர்த்தார். "பிறப்பு ஒக்கும் எல்லா உயிர்க்கும்" என்பது திருவள்ளுவம் (972). கல்லாதவர், அரசரே ஆயினும் அவர் கடையர் என்று குறிப்பிட்டார் (395).

மேற்பிறந்தா ராயினும் கல்லாதார் கீழ்ப்பிறந்தும்
கற்றார் அனைத்துஇலர் பாடு (409)

முற்காலத்து இருந்த இளவரசரே எழுதப் படிக்கத் தெரியாதிருந்தனர். (தாயம்மாள் அறவாணன். அவ்வையார் அன்று முதல் இன்று வரை. பக்கம்-168 முதல் 169 வரை) சான்று வருமாறு.

ஔவையார், தனிப்பாடல் திரட்டு 91.

வெண்பா இருகாலிற் கல்லானை வெள்ளோலை
கண்பார்க்கக் கையால் எழுதானைப் - பெண்பாவி
பெற்றாளே பெற்றாள் பிறர்நகைக்கப் பெற்றாளே
எற்றோமற் றெற்றோமற் றெற்று.

என்பது தமிழர் வரலாறு. திருவள்ளுவர் பார்வையில் கல்லாதவர் இளவரசராகவே இருந்தாலும் கடையவனே ஆவான்.

பொதுமக்கள் அனைவருக்கும் கல்வி கற்பிக்க வேண்டியது அரசர்தம் பொறுப்பு என்பது திருவள்ளுவர் தம் அழுத்தம் திருத்தமான கருத்தாக இருந்தது. எனவேதான், எண்ணும் எழுத்தும் கண்ணென்ப வாழும் உயிர்க்கு (392) என்றும், மாந்தர்க்குக் கற்றனைத் தூறும் அறிவு (396) என்றும், கல்லாதவர் கடையரே (395) என்றும் குறித்தார். அரசனையும், அரசியலையும் முன்னிறுத்தும் இறைமாட்சி எனும் அதிகாரத்தை (39) அடுத்துக் கல்வி என்ற அதிகாரத்தைத் திருவள்ளுவர் அமைத்ததன் நோக்கம், ஆளும் அரசன் கற்றிருக்க வேண்டும் என்பது மட்டுமன்று. மக்களுக்கு அரசர் கல்வி அறிவு ஊட்ட வேண்டும் என்பதே கருத்தாதல் வேண்டும் என்பது மட்டுமன்று. மக்களுக்கு அரசர் கல்வி அறிவு ஊட்ட வேண்டும் என்பதே கருத்தாதல் வேண்டும். ஏனெனில் இறைமாட்சி எனும் அதிகாரத்திலேயே அரசனுக்குக் கல்வி அறிவு கட்டாயம் வேண்டும் என்பதை வெளிப்படையாகத் தெளிவுபடுத்தி விட்டார் (383). எனவே கல்வி, கல்லாமை ஆகிய அதிகாரங்களை வைத்ததன் நோக்கம் ஆளும் அரசன் மக்களைக் கல்வி அறிவால் மேம்படுத்த வேண்டும் என்பதற்காகவே ஆகும்.

திருவள்ளுவர்தம் இக்கருத்தை ஏற்றுத் தமிழரசர்கள் யாரும் செயல்பட்டதாகத் தமிழர் அரசியல் வரலாற்றிலும், சமுதாய வரலாற்றிலும் சான்று இல்லை. ஐரோப்பியக் கிறித்துவ மிஷினரிமார் கி.பி. 1547-இல்

திருநெல்வேலி மாவட்டம் புன்னைக் காயல் எனும் ஊரில் பொதுப்பள்ளியை எச்சாதியினரும் வந்து பயிலும் விதமாக அமைக்கும் வரையில் எண்ணும், எழுத்தும் கற்பிக்கும் பொதுப் பள்ளிகளைத் தமிழரசர்கள் எவரும் நடத்தவில்லை. மாறாக, பயிற்றுவிக்கும் ஆசிரியர்க்கும், பயிலும் மாணாக்கர்க்கும் மான்யம் அளித்து இலவசமாக சமசுகிருதத்தையும், ரிக், யசூர், சாமம், அதர்வணம் என்ற நான்கு ஆரிய வேதங்களையும் குறிப்பிட்ட ஒரு சமூகத்தார்க்கு மட்டுமே தமிழரசர் பல்லவர் காலம் முதல் நாயக்கர்காலம் வரை பதினைந்து நூற்றாண்டுகள் கற்பித்து வந்தனர் என்பதற்கு ஏராளமான சான்றுகள் உள்ளன. (விரிவிற்குப் பார்க்க: க.ப. அறவாணன் எழுதிய "தமிழர் அடிமையானது ஏன்? எவ்வாறு?")

கல்வி பற்றிய திருவள்ளுவர் கருத்தை ஆண்ட அரசர்கள் அத்தனைப் பேரும் புறக்கணித்தனர். அம்மட்டும் இன்றி திருவள்ளுவர் தம் படைப்பில் முதலிடம் கொடுத்த உழவுத் தொழிலை (அதி.104) கடைத்தொழிலாகவும் அத்தொழிலில் ஈடுபட்டோரை கடைமக்களாகவும் அரசர்கள் தாழ்த்தி இருந்தனர். திருவள்ளுவர் தம் சமகால அரசரையும், அரசியலையும் கண்டித்து எழுதிய செய்திகள் மிகவாகத் திருக்குறளில் உள்ளன. எனவேதான் தமிழகத்தை ஆண்ட அரசியலாரால் திருக்குறள் முற்றுமாகப் புறக்கணிக்கப்பட்டது.

திருவள்ளுவர், அறத்துப்பாலையும், பொருட்பாலையும் நுணுக்கமாக ஆய்ந்தறிந்தே வேறுபடுத்தி இருத்தல் வேண்டும். அறத்துப்பால் கருத்துகளுள் பெரும்பாலானவை தனிமனித ஒழுக்கம் சார்ந்தவை. கடவுள், ஊழ் நம்பிக்கைகள், இல்லறம், துறவறம் முதலானவை ஒவ்வொருவர்தம் தனிப்பட்ட (Personal Qualities) குணங்கள். அரசோ, அரசனோ தலையிடக் கூடாதவை. மாறாகப் பொருட்பாலில் இடம் பெற்றுள்ள, வரைவின் மகளிர் (வேசையர்) ஒழிப்பு (92) கள்ளுண்ணாமை (93), சூது ஒழிப்பு (94), உழவு (104), நல்குரவு (வறுமை) ஒழிப்பு (105) முதலாயின அரசனால் நடைமுறைப்படுத்தப்பட வேண்டிய சமுதாய அறங்கள். அரசனின் கட்டாயக் கடமைகள். ஆனால் திருவள்ளுவர் நோக்கில், இவை அவர்கால அரசர்களால் சரிவரப் போற்றப் பெறவில்லை. இது சமுதாயக்கேடு என்பதைத் திருவள்ளுவ மேதை நன்கு தெரிந்திருந்தனர் ஆதல் வேண்டும்.

(முற்றும்)

☆



# அருளாலயத் தேர்தல்

(தமிழாகரர். தெ. முருகசாமி, புதுச்சேரி - 9)

தேர்தல் தேர்தல் என்று
தெருவெல்லாம் மக்கள் இன்று
தேர்த்திரு விழாவைப் போலத்
தினந்தோறும் கூடிப் பேசும்
தேர்தலைப் பற்றி நானும்
தெளிவாகத் தெரிந்து கொள்ளத்
*[1]தேர்தலைச் செய்தேன்! யார்தான்
தெரிவிப்பார் என்றே நாளும்!

கட்சியென் றாலே கொடிய
கடுங்காடு எனும்பொரு ளாகக்
கட்சிபல காட்டுக் கூட்டாய்க்
கண்ணுக்குத் தெரிவ தாலே
கட்சியில் எவரைத் தேர்ந்து
கச்சிதமாய்க் கேட்போம் என்றால்
பட்சிபோல் பறப்போ ருக்குப்
பதில்சொல்ல நேரம் உண்டோ?

ஒருகட்சி தொண்டர் தம்மை
ஒருவாறாய்ப் பார்த்து நானும்
ஒருவிளக்கம் தேர்தல் பற்றி
ஒருவகையாய்க் கேட்ட போது,
ஒருங்கிணைந்த கட்சி யெல்லாம்
ஒருசார்பாய் கூட்ட ணிக்குள்
*[2]ஒருவாது சேர்ந்த பின்னர்
ஒருவிதமாய்ச் சொல்வேன் என்றார்.

இப்படித் தானே நாட்டில்
இருக்கின்ற கட்சி யாளர்
செப்புவர் என்ப தாலே
செவிசாய்த்துக் கேட்போர் தாமும்
எப்படிக் கிடைப்பா ரென்றே
எதுவும்புரி யாமல் ஏங்கி
சப்பிடும் பனம்ப ழத்தின்
சவலையாய்க் கண்ண யர்ந்தேன்.

சோர்ந்துமே இருந்த எந்தன்
சோகத்தைப் புரிந்த வாறு,
ஓர்ந்தொருவர் அருகில் வந்தே
ஓதிடுக உந்தன் நெஞ்சை
ஈர்ந்திடும் ஐயங் கட்கு,
ஈந்திடுமெம் விடையி னாலே
சேர்ந்திடும் தெளிவு என்றார்!
சேதியைச் சொல்ல லானேன்!

தெருவெல்லாம் பெரியப் பெரிய
திகைப்பூட்டும் விளம்ப ரத்தில்
உருவங்கள் பொறித்த தோடே
உள்ளபல கட்சிச் சின்னம்
பெருக்கமுடன் வரைந்து வைத்துப்
பெரிதாகக் கட்சிக் கொள்கை
உருக்கமுடன் எழுதிக் காட்டும்
உள்நோக்கம் யாதோ? என்றேன்!

ஊரெல்லாம் சுற்றிப் பார்த்தேன்
ஊலிலுள்ள வீட்டுச் சுவரை
ஊறுபடுத் திடும்வித மாக
ஊமைபோல் இரவோ டிரவாய்
ஊனமுடன் எழுதி வைக்கும்
ஊத்தையாம் செயலைத் தானும்
ஊசிபோல் குத்திக் கேட்க
ஊரிலெவரும் இலையோ? என்றேன்!

வாக்காளர் என்கின் றார்கள்!
வாக்குச்சீட் டென்கின் றார்கள்!
வாக்கிற்காய் வீடு வீடாய்
வாசற்படி ஏறி வந்தே
நாக்கினால் புகழ்ந்து பேசி
நானுங்கள் தொண்டன் என்னும்
போக்கினைக் கொண்ட கூட்டம்
போகவர ஏனோ? என்றேன்!

செப்பிடும் உந்தன் கேள்வி
சீராய்வரு தேர்தல் பற்றி
ஒப்பியே இருப்ப தாலே
ஓர்ந்திதைச் சொல்வோம் என்று
அப்பிடும் சந்த னத்தில்
ஆர்ந்திடும் மணத்தைப் போலத்
திப்பிய*[3] மாகச் சொல்ல
தீர்ந்தன ஐய மெல்லாம்

ஆட்சியைப் பிடித்து நாட்டை
ஆண்டிட வேண்டும் என்ற
மாட்சிமைக் காக வேண்டி
மாபெரும் விளம்ப ரத்தைக்
காட்சிக்காய் வைத்துக் காட்டிக்
காசுபணப் பெருக்கத் தாலே
தாட்சண்ய மில்லாச் செயலைத்
தாமாகச் செய்கின் றாரே!

(தொடரும்)

---

1. தேர்தலைச் செய்தேன் - ஆராய்ந்தேன்.
2. ஒருவாது - நீங்காது
3. திப்பிய - வியப்பாக

# ஆணவ இயல்பு

(பேராசிரியர். ஆ. சிவலிங்கனார், மயிலம்)

ஒரு நிகழ்ச்சி

என் உறவினர் வீட்டு நிகழ்ச்சி ஒன்றில் கலந்து கொள்ளச் சென்றிருந்தேன். ஓரிடத்தில் சில பெண்கள் கூடிப் பேசிக் கொண்டிருந்தனர். அப்போது ஒன்றரை வயதுச் சிறுவன் தன் கையில் ஒரு சிறு கோலை வைத்து விளையாடிக் கொண்டிருந்தான். அவன் திடீரென ஒரு பெண்ணின் முதுகில் அக்கோலால் அடித்தான். அப்பெண் "டேய் அடிக்காதேடா" என்றாள். அவன் மற்றொரு பெண்ணின் முதுகிலும் அடித்தான். இப்படி அங்கிருந்தாரை அடிக்கவே ஒரு பெண், "ஏன் இப்படியடிக்கிறாய்? அடிக்காதேடா செல்லம்" என்றாள். மீளவும் அடித்தான். அச்சிறுவனின் தாய், "இது ஆணவம் பிடித்தது; அப்படித்தான் செய்யும்; அடிகொடுத்தால் தான் அடங்கும்" என்று சொல்லி ஓர் அடி கொடுத்தார். சிறுவன் அழுது அடங்கித் தாயிடமே வந்தான். தாயும் அன்போடு அணைத்து அமைதிப்படுத்தினார்.

தத்துவம்

இந்நிகழ்ச்சியைக் கண்டயான் நிகழ்ச்சியின் மூலம் ஓர் உண்மையுணர்ந்தேன்.

சிறுவன் தான் செய்வது சரி என எண்ணினான். அது தவறு என நினைக்கவில்லை. "அடிக்காதே" என்று சொல்லியும் கேட்கவில்லை. தாய் தண்டித்தபோது அடங்கினான். பின் தாயிடமே வர, அவர் அரவணைத்தார். தாய் சொன்ன வார்த்தை "இது ஆணவம் பிடித்தது" என்பது.

நிகழ்ச்சியையும் தாயின் வார்த்தையையும் எண்ணும் போது, ஆணவம் என்பது எப்படிப்பட்டது என்பது விளங்கியது.

சிறுவன் தாய் செய்வது தவறு என்பது உணரவில்லை. அதனால் ஆணவம் தவறை உணரச்செய்யாது என்பது தெரிகிறது.

பிறர், "அடிக்காதே" என்று கூறியும் கேட்கவில்லை சிறுவன். ஆணவம் பிறர் கூறினும் கேட்கவொட்டாது என்பது தெரிகிறது.

தாய் அடித்து அதட்டியபோது சிறுவன் அடங்கினான். ஆணவம் தண்டனையால்தான் அடங்கும் என்பது தெரிகிறது.

குழந்தை தன் செயலைவிட்டுத் தாயிடம் வந்தான். ஆணவம்தான் அடங்கி ஓயும் என்பது தெரிகிறது.

தாயும் குழந்தையை அரவணைத்தாள். ஆணவம் அடங்கின் அதனால் பிடிக்கப்பட்டவன் நன்மையடைவான் என்பது தெரிகிறது.

இன்னும் சற்று விவரமாக எண்ணினால், "ஆணவம் என்பது தான் அறியாது; அறிவித்தாலும் அறியாது; அடக்கினால் அடங்கும்" என்பது ஆணவ இலக்கணம் என உணரலாம்.

இந்த ஆணவ விளக்கமே கந்தபுராணம்.

சூரன், பதுமன் என்ற இருவர் உடம்பும் ஒருடம்பாய் நின்ற சூரபதுமன், ஆணவமயமானவன். தான் தேவர்களைத் துன்புறுத்துவது தீது என்பதையுணரவில்லை; வீரவாகு முதலியோரும் தன் தம்பி சிங்க முகனும், "தேவரைச் சிறைவிடுக்க" எனக் கூறியபோதும் கேட்கவில்லை. பின்னர் முருகன் அவனையழித்தபோது, தன் எண்ணம் செயல் ஒழிய முருகனைச் சார்ந்தான். முருகன் அவனை மயில் வாகனமாகவும் சேவற்கொடியாகவும் கொண்டாண்டான்.

சிறுவன் - சூரபதுமன்

சிறுவன் செயல் - சூரபதுமன் தேவரைச் சிறையிலிட்டுக் கொடுமை செய்தல்.

சிறுவனைத் தடுத்தல் - சூரபதுமனை தேவரைச் சிறையிலிருந்து விடுவிக்க எனப் பலர் கூறல்.

சிறுவன் கேளாது அடித்தல் - சூரபதுமனும் பிறர் அறிவுரை கேளாது கொடுமை செய்தல்.

தாய் அடித்தல் - முருகன் அழித்தல்.

தாய் சிறுவனை அணைத்தல் - முருகன் சூரபதுமனை மயிலாகவும் கொடியாகவும் கொள்ளல்.

உலக வழக்கில் தெரிந்தோ தெரியாமலோ மெய்ப்பொருட் (தத்துவக்) கருத்துகள் வழங்கப்படல் உண்டு என்பதற்கு இந்நிகழ்ச்சி ஓர் உதாரணமாகும்.

குறிப்பு : திருவள்ளுவராண்டு 2037 மாசி 14 ஆம் நாள் (26.2.06) நடைபெற்ற புதுச்சேரி பன்னிரு திருமுறை வழிபாட்டு மன்றத்தின் கந்தபுராண விளக்கவுரைத் தொடக்கவிழாவில் தலைமையேற்று ஆற்றியவுரையின் சுருக்கம் இது. விரிவுரையாளர் தருமையாதீனக் கல்லூரிப் பேராசிரியர் முனைவர். மு. சிவச்சந்திரன் அவர்கள்.

# புதுமைப்பித்தன் நூற்றாண்டு விழாக் குழு

ஏ-1, அருணாசலம் அடுக்ககம், 1077, முனுசாமி சாலை,
கலைஞர் கருணாநிதி நகர் (மேற்கு),
சென்னை - 600 078
தொலைபேசி : 24723269 / 25340622 / 24802684

ஒருங்கிணைப்பாளர்கள் : "சிகரம்" ச. செந்தில்நாதன், "முகம்" மாமணி

பேரன்புடையீர்,

இருபதாம் நூற்றாண்டின் தலைசிறந்த படைப்பாளர்களில் ஒருவரும் தமிழ்ச்சிறுகதை இலக்கியத்தை சர்வதேச தரத்திற்கு உயர்த்திவருமான புதுமைப்பித்தனின் நூற்றாண்டைச் சிறப்பாகக் கொண்டாட விழைந்த தமிழ்ப் படைப்பாளர்கள். "புதுமைப்பித்தன் நூற்றாண்டு விழாக் குழு" அமைத்துள்ளனர். இக்குழுவில் பல்துறையைச் சேர்ந்த பெருமக்கள் இடம் பெற்றுள்ளனர். "சிகரம்" ச.செந்தில்நாதன், "முகம்" மாமணி ஒருங்கிணைப்பாளர்களாக இருந்து செயல்படுகின்றனர்.

* *சென்னைப் பல்கலைக் கழகத்தில் புதுமைப்பித்தன் பெயரில் அறக்கட்டளை நிறுவுவது.*
* *கல்லூரி மாணவர்களுக்குப் போட்டிகள் நடத்துவது.*
* *புதுமைப்பித்தனின் சிறுகதைகளை நாடகமாக்குவது.*
* *நூல்கள் வெளியிடுவது.*
* *புதுமைப்பித்தன் நூற்றாண்டு மலர் வெளியிடுவது.*
* *புதுமைப்பித்தன் தபால்தலை வெளியிட மத்திய அரசை கோருதல்.*

உட்பட பல பணிகளை இக்குழு மேற்கொண்டு வருகின்றது. நூற்றாண்டு நிறைவு விழா ஏப்ரல் மாதத்தில் மிகச் சிறப்பாக நடத்த ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

இப்பணிகள் சிறப்பாக நிறைவேறிட தமிழகத்தின் அனைத்துப் பகுதி மக்களின் பங்களிப்பும் அவசியம் தேவை. மேற்கண்ட பணிகள் வெற்றியடைய தங்களின் மேலான உதவியினை நல்கிடும்படி கேட்டுக் கொள்கிறோம். தாங்கள் அனுப்பும் காசோலை / வரைவோலை

**"புதுமைப்பித்தன் நூற்றாண்டு விழாக்குழு"**

**"Puthumaipithan Centenary Celebration Committee"**

என்ற பெயரில் எடுத்து மேற்கண்ட முகவரிக்கு அனுப்பி வைக்கும்படி கேட்டுக்கொள்கிறோம்.

---

# இப்படி இருங்கள்!

**(கவிவேந்தர். கா. வேழவேந்தன்)**

*ஈக்களிலே 'தேனீ'யாய் இருங்கள்; ஆனால்*
*என்றைக்கும் 'குளவி'களாய் மாறா தீர்கள்!*
*பூக்களிலே 'முல்லை'யைப்போல் இருங்கள்; ஆனால்*
*பொழுதுக்கும் 'எருக்கம்பூ' ஆகா தீர்கள்!*
*காக்கின்ற 'பசு'வாக இருங்கள்; ஆனால்*
*கவிழ்க்கின்ற 'நரி'யாக மாறா தீர்கள்!*
*'தேக்'கைப்போல், தென்னையைப்போல் இருங்கள்; ஆனால்*
*சீரழிக்கும் 'எட்டி' யென மாறா தீர்கள்!*

*காற்றினிலே 'தென்ற'லைப்போல் இருங்கள்; ஆனால்*
*'கடும்சூறை' யாய்மாறி அழிக்கா தீர்கள்!*
*ஊற்றெடுக்கும் 'ஆற்'றைப்போல் இருங்கள்; ஆனால்*
*உயிர்தீய்க்கும் 'எரிமலையின் குழம்'பா காதீர்!*
*மாற்றமிலா 'மண்புழு'போல் துணைநல் குங்கள்*
*'மலைப்பாம்' பாய் மற்றவரை விழுங்காதீர்கள்!*
*ஏற்றமிகு 'பாரி'யைப்போல் இருங்கள்; என்றும்*
*ஈரமிலா 'இட்ல'ரைப்போல் இருக்கா தீர்கள்!*

## அருள்தரு சண்முகநாதப் பெருமான் திருக்கோயில் பங்குனி உத்தரத் திருவிழா

2.4.2006 ஞாயிறு முதல் 11.4.2006 செவ்வாய் வரை நிகழும்.

| | |
|---|---|
| 9.4.2006 ஞாயிறு | தெப்பத் திருவிழா, வெள்ளிரதம் |
| 10.4.2006 திங்கள் | திருத்தேர் |
| 11.4.2006 செவ்வாய் | பங்குனி உத்தரம் – அக்கினிக்காவடி பறவைக் காவடி |

*அனைவரும் வருக!* *ஆறுமுகப் பெருமான் அருள்பெறுக!*

# மக்கள் சிந்தனை

## உரிமை, பதிப்பு, அறிக்கை

| | | | |
|---|---|---|---|
| 1. | இதழின் பெயர் | : | மக்கள் சிந்தனை |
| 2. | மொழி | : | தமிழ் |
| 3. | வெளியீடு | : | திங்கள் இதழ் |
| 4. | வெளியீடு இடம் | : | குன்றக்குடி – 630 206 |
| 5. | ஆசிரியர் } உரிமை | : | மரு. பரமகுரு திருவண்ணாமலை ஆதீனம், குன்றக்குடி |
| 7. | பதிப்பாளர் } அச்சகம் | | பழ. பாண்டித்துரை சண்முகநாதன் அச்சகம், மேலரத வீதி, குன்றக்குடி. |
| 8. | பதிவு | : | செய்தி இதழ் |

*மேற்கண்ட விவரம் யாவும் உண்மை என்றும், நம்பத் தகுந்தவை என்றும் உறுதி கூறுகிறேன்.*

நாள் : 16-3-2006

**ம. பரமகுரு**



# சிந்தனை வட்டம்

"மக்கள் சிந்தனை" இதழமைப்பும் கருத்து வளமும் நன்றாக அமைந்துள்ளன.

மு. பழனிஇராகுலதாசன் மிக நன்றாக அடிகளை அவர்தம் சிந்தனை ஓட்டங்களைப் படமெடுத்துக் காட்டும் வகையில் எழுதுகிறார். அடிகள் எலுமிச்சம் பழத்தை உருட்டுவது (இல்லாயானால் மேசை மீதுள்ள வட்டவடிவிலமைந்த தாள்தாங்கியை உருட்டுவது) சிந்தனையோட்டத்தை அமைக்கும் முறையை மிகத் தெளிவாக அமைத்துக் காட்டினது நன்று. எனக்கு மலரும் நினைவுகள்.

தமிழாகரர் தெ. முருகசாமி அவர்கள் சிறந்த வளமார்ந்த கவிதையருவி என்பதை "மக்கள் சிந்தனை"யின் மூலம் தான் அறிந்து கொண்டேன்.

சொ.சொ.மீ. சுந்தரனார் கருத்து அருமை. அய்யா சொ.சொ.மீ. ஆள்கவிஞ! ஆருனைப் பொல் மெய்யாக ஓர் சொல் விளம்பினார் – தெய்வவருள் தன்னைப்போலேஓர் மறுபதிப்பைத் தந்தாரே என்னெனன்பேன் என்னெனன்பேன் யான்.

–முனைவர். **வை. இரத்தினசபாபதி**

தராதலம் போற்றும் தேவ கோட்டை
இராகுல தாசர் இனிப்பாய் எழுதும்
"அடிகள் முன்னர் யானடி வீழ்ந்தேன்"
அடிக்கரும் பான கட்டுரை ஏழில்,
பட்டி மன்றத் தலைப்புத் தானும்
பட்டுக் கோட்டை யாக மாற
குணமெனும் குன்றாம் குறட்கே அடிகள்
மணக்க எழுதிய மாப்பொருள் போல
அடிகள் உரையில் அவர்களே நின்றார்
(ஆம்)
அடிகள் உரையில் அடிகளே நின்றார்?
என்றவா சகந்தான் என்னை ஈர்த்தது!
நன்றே! அடிகள்முன் நாம்வீழ் தலுமே!

–தமிழாகரர். **தெ. முருகசாமி**

---

# மணிவாசகர் பதிப்பகத்தின்

## தமிழ்மாமுனிவர் தவத்திரு குன்றக்குடி அடிகளார்

# நூல்வரிசை

**7200 - பக்கங்கள் - 16 தொகுதிகள்**

| | |
|---|---|
| திருக்குறள் - தொகுதி I | 75-00 |
| திருக்குறள் - தொகுதி II | 65-00 |
| திருக்குறள் - தொகுதி III | 100-00 |
| திருக்குறள் - தொகுதி IV | 75-00 |
| இலக்கியம் - தொகுதி V | 75-00 |
| இலக்கியம் - தொகுதி VI | 100-00 |
| சமய இலக்கியம் - தொகுதி VII | 80-00 |
| சமய இலக்கியம் - தொகுதி VIII | 100-00 |
| சமய இலக்கியம் - தொகுதி IX | 75-00 |
| சமயம் - தொகுதி X | 90-00 |
| சமயம் - தொகுதி XI | 100-00 |
| சமயம் - தொகுதி XII | 125-00 |
| பொது - தொகுதி XIII | 140-00 |
| பொது - தொகுதி XIV | 125-00 |
| பொது - தொகுதி XV | 120-00 |
| பொது - தொகுதி XVI | 140-00 |

**மணிவாசகர் பதிப்பகம்**

31, சிங்கர் தெரு, பாரிமுனை

சென்னை - 600 108.




# திருக்கயிலாயம் – மானஸரோவர் – நேப்பாள்

**17 நாட்கள் திருப்பயணம் மாதம் ஒரு குழு புறப்படுகிறது**

பயணத்தின் போது முக்திநாத் சென்றுவர ஏற்பாடு செய்து தரப்படுகிறது

| | |
|---|---|
| பிரதி மாதம் | 10 நாட்கள் கொண்ட பூரி, புவனேஸ்வர், கொனார்க், கலகத்தா, கயா, காசி அலகாபாத் |
| 14.04.2006<br>01.05.2006 | 12 நாட்கள் கொண்ட சுற்றுலா, சிம்லா, குல்லு, மணாலி, டெல்லி, ஆக்ரா, சண்டிகார், மதுரா |
| 05.06.2006 | 30 நாட்கள் கொண்ட 12 சோதிர்லிங்கங்கள். பன்டரிபுரம், மும்பை, நாசிக், பஞ்சவடி, சீரடி, டெல்லி, ஹரித்துவார், பத்ரிநாத், ஆக்ரா, மதுரா, ரிஷிகேஷ், விஜயவாடா. |
| பிரதி மாதம் | 12 நாட்கள் கொண்ட கேதார், பத்ரி, ஹரித்துவார், ரிஷிகேஷ், டெல்லி. |
| 25.062006<br>10.07.2006 | 15 நாட்கள் கொண்ட அமர்நாத் பனிலிங்க தரிசனம், வைஷ்ணவிதேவி, அமிர்தசரஸ், டெல்லி, குருசேத்திரம், பனிலிங்கம் தரிசனம் செய்ய டோலி, குதிரை, ஹெலிகாப்டர் வசதி உண்டு. |
| பிரதி மாதம் | 12 நாட்கள் கொண்ட காட்மாண்டு முக்திநாத், காசி, அலகாபாத் |
| பிரதி மாதம் | ஆன்மீக ஸ்ரீலங்கா, திருப்பயணம் 7 இரவு / 8 பகல்கள் திருக்கேதிசுரம், திருக்கோனமலை கதிர்காமம் |
| பிரதி மாதம் | மலேசியா, சிங்கப்பூர் 5 இரவு / 6 பகல் சுற்றுலா மற்றும் பாங்காங்க் பட்டாயா 4 இரவு / 5 பகல் |
| மாதந்தோறும் | 8 நாட்கள் கொண்ட அந்தமான் டூர், ஒரு வழி கப்பல் / ஒரு வழி விமானம் |

**மனோகர் டிராவல்ஸ்**
1433 ஸ்வஸ்திக் காம்ப்ளக்ஸ்
அபிராமி தியேட்டர் அருகில்
ஈரோடு – 638 011
போன்: 2223580
மொபைல் : 94433-80159, 94433-80150
E Mail :manohartravvels@packagetours4u.com
Website : www.packagetoursru.com



**கைலாஷ் டிராவல்ஸ்**
1/6 வீராசாமி வீதி முதல் தளம்
ஹோட்டல் எவரெஸ்ட் எதிர்ரோடு
பெரியமேட்,
சென்னை – 600 003
போன்: 42053923,
மொபைல் : 94433-80154
E Mail : kailashtravels@packagetours4u.com

உ
சிவமயம்







# தெய்வப்பழநியில் புகழ்பெற்றது

## பழநி

## பரிமள விலாஸ்

# S. சித்தனாதன்

## ஜவ்வாது வாசனை விபூதி
## &
## ஸ்பெஷல் பஞ்சாமிர்தம்

**வாங்கி உபயோகியுங்கள்**

**Prop : S. சித்தனாதன் சன்ஸ்**

**அடிவாரம், பழநி – 624 601.**

போன் கடை : 242405 வீடு & ஸ்டோர் : 242406

## தவத்திரு குன்றக்குடி அடிகளாரின்

# *புதிய நூல்*

உலகம் முழுக்கத் திருக்குறள் பரப்பப் பேரவை கண்டவர்; தம் வாழ்நாள் முழுக்க வள்ளுவ நெறியினை வழங்கி நின்றவர்; வாழ்ந்து நிலைத்தவர் ஆகிய அடிகள் பெருமான் எழுதிய திருக்குறள் உரை முதன் முதலாக, நூல் வடிவமாக!




**தவத்திரு குன்றக்குடி அடிகளார்**
**திருக்குறள் உரை**
(விலை. ரூ. 160/- பக்கங்கள் : 360)

பதிப்பகங்கள், கல்லூரி, பள்ளி, நிறுவனங்கள் மற்றும் இலக்கிய அமைப்புகள் இவற்றோடு மாணவ, மாணவியர்க்கும் "மக்கள் சிந்தனை" சந்தாதாரர்க்கும் விலைச் சலுகை உண்டு.

அடிகளாரின் முத்துவிழா வெளியீடு

**அருள்நெறிப் பதிப்பகம்**
குன்றக்குடி - 630 206
சிவகங்கை மாவட்டம்.

பதிவு எண் : TN/SP/KKD-01/2006-2008
மக்கள் சிந்தனை மார்ச் / 2006. வெளியீட்டு நாள் 20.3.2006






பெறுநர்

திரு ______________________ அவர்கள்

ஆதீனகர்த்தர்
கோவிலூர் ஆதீனம்
கோவிலூர் - (Post)
காரைக்குடி - (Via)

அச்சிட்டோர் : சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி. ✆ : 264166